உ

# திருவலிவலத்
# தல வரலாறு






திருவலிவலத் தேவஸ்தான

வெளியீடு

சாது அச்சுக்கூடம்,

இராயப்பேட்டை, சென்னை.

1942

விலை அணா 2

31-2

உ

# திருவலிவலத் தல வரலாறு

திருச்சிற்றம்பலம்

"பிடியத னுருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்
கடிகண பதிவர வருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே."

## தலமும் இருப்பிடமும்

ஆளுடைய நாயகி உள்நெகிழ் கருணையின் ஒழுக்கம்போன்ற காவிரியாறு பரந்தோடிக் கொங்குந் தெங்கும் எங்கும் நிறைந்து கள்ளார் வண்டு பண்செய்யப்பெற்றது சோழ வளநாடு. அந்நாட்டில் பாடல்பெற்ற சிவத்தலங்கள் பலவுள்ளன. அவைகளுள் சிறந்ததொன்று திருவலிவலம். இத்தலம் தஞ்சாவூர் ஜில்லா நாகப்பட்டணம் தாலூகாவிலுள்ளது. தென்னிந்திய இருப்புப்பாதை திருவாரூர் அறந்தாங்கிக் கிளையில் திருநெல்லிக்காவல் என்ற புகை வண்டி நிலையத்தில் இறங்கிக் கிழக்கே

5 மைல் சென்றுல் இத்தலத்தை யடையலாம். இது வெள்ளையாற்றின் வடகரையில் அமைந்திருப்பது.

## கோயிலின் அமைப்பு

திருக்கோயில் ஊரின் வடமேற்கு பாகத்தில் கிழக்கு நோக்கியிருக்கிறது. 85 அடி உயரமுள்ள ஐந்து நிலைக் கோபுரமொன்று கோயிலின் வாயிலை அழகுபெறச் செய்கின்றது. கோயிலின் பரப்பு 81,606 சதுர அடி. கீழ்மேல் மதில் நீளம் 406 அடி. தென் வடல் மதில் நீளம் 225 அடி. கோயிலில் மூன்று பிரகாரங்கள் உள்ளன. மதிற் புறத்தே தோட்டமிருக்கிறது. கோயிலையும் தோட்டத்தையும் சுற்றி மூன்று புரங்களிலும் நீர் நிறைந்த அகழ் சூழ்ந்திருக்கிறது. அவ்வகழின் அகலம் 190 அடி இருக்கிறது. ஈசன் கோயில் ஒரு செய்குன்றின் (கட்டு மலையின்) மேல் அமைந்திருக்கிறது. அதன் மண்டபம் ஒரே கல்லால் ஆக்கப்பட்டதோவென ஐயுறத்தக்கது. பழைய முன் மண்டபம் அழியுந்தறுவாயில் இருந்ததையகற்றி விட்டு (Reinforced Concrete) ஞல் அண்மையில் அமைக்கப்பட்டுள்ளது. இதை அமைத்தும், அழிந்த இடங்களைப் புதுப்பித்தும் பெருஞ்சிறப்புடன் 1938-ம் வருஷத்தில் பெருஞ்செலவில் கும்பாபிஷேகம் செய்யப்பட்டிருக்கிறது. திருஞானசம்பந்தர் திருவருள் வாக்கை அறியாத சைவ நன்மக்களிரார். தேவாரப் பாடல்களை ஓதத்தொடங்குமுன் "பிடியதனுருவுமை" என்னும் இத்திருப்பாடலையே ஓதுகின்றனராதலின் இத்திருப் பாடலை ஓதுவாரெல்லாருளத்திலும் இதனேடு தொடர்புற்றிருக்கும் திருத்தலமும் நிலைபெற்றிருக்கும்.

இத்தலத்தையும் இங்கு வீற்றிருக்கும் இறைவனை யும் மனத்துள் கொள்வார்க்கெல்லாம் தோன்றாத் துணையாயிருந்து பேரருள் சுரக்கும் பெருந்தகைமை யால்தான் "எண்ணும் மனத்துள் நண்ணும் இயல் பினன்" என்பதை நானிலத்திற்கு நன்கு விளக்கவே மனத்துணை நாதன் என்று பெயர் கொண்டு இக் கோயில் கொண்டிருக்கின்றன போலும். எம்பெரு மான் எழுந்தருளியிருக்கும் இத்திருத்தலம் வலிவலம் ஏகசக்ரபுரம், கொன்றைவனம், வில்வவனம் முன்னூற்றி மங்கலம் என்று அழைக்கப்பெறும். நிலஞ்சூழ்பாவை நிரை மலரேந்தி வலஞ் சூழ்வரூஉம் வண்ணம் ஏய்ப்ப "அகழியால் சூழப்பட்டுள்ளவரை திகழ்வாணனை மதி லால் சூழப்பட்டுள்ள இத்திருகோயில் நிலத்தில்அமைக்க படாமல் செய்குன்றின்மேல் (கட்டுமலை) அமைக்கபட்டு சிறந்து விளங்குகின்றது. இம்மாதிரி அமைந்திருப்பதை மாடக் கோயிலென்றும் பெருங்கோயிலென்றும் கூறு வர். இம்மாதிரியான கோயில்களைக் கட்டினவர் சோழ அரசரான கோச்செங்கண்ணன் என்று கூறப்படுவதால் அவ்வரசரின் காலமே இக்கோயிலின் காலமும் ஆகும். இவ்வரசர் காலம் ஆராய்ச்சிக்குரியது. சேரமான் கணைக் காலிரும்பொறை என்ற அரசனைச் சிறையிலிட்ட கோச் செங்கண்ணனும், இவரும் ஒருவராயிருப்பின் இவர் காலம் கி. பி. 2000 நூற்றாண்டிற்கு முற்பட்டதாகும்.

## தலத்தின் வேறுபெயர்கள்

இப்பொழுது இத்தலத்தின் வழங்கும் பெயர் திரு வலிவல மென்பது. இப்பெயரே தேவாரம், பெரிய

புராணம் முதலியவற்றில் காணப்படுகிறது. இதுவே யன்றி, கொன்றைவனம் வில்வவனம் ஏகசக்ரபுரம் முன்னூற்று மங்கலம் என்னும் வேறு பெயர்களும் இத்தலத்துக்கு உள.

## மூர்த்திகள்

இத்திருக்கோயிலின் முதற் பிராகாரத்தில் நுழையும்பொழுது கணபதி காட்சி யளிக்கின்ருர். முதற்பிராகாரத்தில் கெர்ப்பக்கிரகத்தின் பின்னுல் 72 அடியார்களின் திருவுருவங்கள் எழுந்தருளப் பெற்றுள்ளன. திருத்தொண்டர் புராணமாகிய பெரியபுராணத்தில் தனியடியார் அறுபத்துமூவர் (63). அறுபத்துமூவரைப் பற்றியும் தொகையடியார் ஒன்பதின்மரைப் பற்றியும் கூறியிருப்பதற்கேற்ப இங்கும் 72 அடியார்கள் திருவுருவங்கள் காணப்படுவது மகிழ்வதற்குரியது. அடியார்கள் எழுந்தருளியிருக்கும் இடத்திற்கு முன்னே வலம்புரி விநாயகர் கோயில்கொண்டுள்ளார். இவ்வூர் இறைவனுர் மனத்துணைநாதரின்தேவியார்பெயர் மாழையுண்கண்ணியார். இரண்டாம்பிரகாரத்தில் இடப்புறத்தில் வீற்றிருக்கின்ருர். ஷை கோயிலின் வலப்புறச் சுவரிலும், மூலலிங்கத்தின் முன்னிலை வாயிற்படி நிலையிலும் தோழப்ப தேவரின் உருவச்சிலை, நிலை நிறுத்தப்பட்டிருக்கிறது. ஷை யார் இவ்வூர் உயர்பெருஞ் சைவத் திருவாளர் K. மனத்துணைநாத தேசிகரவர்களின் 6 பரம்பரைக்கு முற்பட்டவர்.

## படத்திலுள்ள எண்ணும் விவரமும்

1. ஸ்ரீ இருதய கமலநாதர் (மனத்துணைநாதர்)
2. ஸ்ரீ சந்திரசேகரர்
3. நடராஜர்
4. மண்டபம்
5. விக்னேஸ்வரர்
6. ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி
7. வலம்புரிப் பிள்ளையார்
8. அறுபத்துமூவர்
9. சுப்பிரமணியசுவாமி
10. மஹாலக்ஷிமி
11. காசிவிஸ்வநாதர்
12. உக்கிராணஅறை
13. சண்டேஸ்வரர்
14. கிணறு
15. நவக்கிரகமண்டபம்
16. மடப்பள்ளி
17. ஸ்தலவிருக்ஷம் (புன்னை மரம்)
18. மாழையொண் கண்ணியார்
19. சண்டேஸ்வரி அம்மன்
20. வஸந்தமண்டபம்
21. பிடாரியம்மன்
22. களஞ்சியம்
23. படித்துறை மண்டபம்
24. பிள்ளையார்
25. பள்ளியறை
26. ஆடிப்பூர அம்மன்

### தீர்த்தம்

கோயிலைச் சுற்றியுள்ள திருக்குளம் சக்கர தீர்த்தமென்று வழங்கப்படுகின்றது.

சூரியன் இங்குவந்து இறைவனை வழிபட்டு விட்டு வலமாகச் சென்று வந்தகாலை அவன் தேர்ச்சக்கரமழுந்திப் பள்ளமேற் பட்டு அதனால் அகழியேற்பட்டதென்று கர்ணபரம்பரைச் செய்தியொன்று உலவுகிறது.

### ஸ்தல விருக்ஷம்

இக்கோயிலின் முதற்பிரகாரத்தில் ஸ்தல விருக்ஷமான புன்னைமரம் உயர்ந்தோங்கித் தண்ணிழல் தருகின்றது.

## தலப்பெருமை

இக்கோயிலைப் பற்றிய ஸ்தலபுராணம் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. தேவார ஆசிரியர்களால் பாடப்பட்ட சிறப்பினையுடையது. இவ்வூரின் பெயர் தேவார ஆசிரியர் வரலாறு கூறுமிடத்து திருத்தொண்டர் புராணத்தில் குறிப்பிட்டுள்ள பெருமை பெற்றுள்ளது. அது வருமாறு :

" மல்ல னீடிய வலிவலங் கோளிலி முதலாத்
தொல்லை நான்மறை முதல்வர்தம் பதிபல பணிந்தே
யெல்லை யிற்றிருப் பதிகங்க ளாற்பணிந் தேத்தி
யல்ல றீர்ப்பவர் மீண்டுமா ரூர்தொழ வணைந்தார்.

—திருஞானசம்பந்தர் புராணம்

" நீராருஞ் சடைமுடியார் நிலவுதிரு
வலிவலமு நினைந்து சென்று
வாராரு முலைமங்கை யுமைபங்கர்
கழல்பணிந்து மகிழ்ந்து பாடிக்
காராருங் கறைக்கண்டர் கீழ்வேளூர்
கன்றாப்பூர் கலந்து பாடி
யாராத காதலினால் திருவாரூர்
தனின்மீண்டு மணைந்தா ரன்றே.

—திருநாவுக்கரசு நாயனார் புராணம்

அங்கு நின்று மெழுந்தருளி யளவி லன்பி னுண்மகிழச்
செங்க ணுதலார் மேவுதிரு வலிவ லத்தைச் சேர்ந்திறைஞ்சி
மங்கை பாகர் தமைப்பதிகம் வலிவ லத்துக் கண்டேனென்று
எங்குநிகழ்ந்ததமிழ்மாலையெடுத்துத்தொடுத்தவிசைபுனைவார்.

—சுந்தரமூர்த்தி நாயனார் தடுத்தாட்கொண்ட புராணம்

## இத்தலத்துப் பற்றிய நூல்கள்

தேவாரம் சம்பந்தர் பதிகம் 22 பாசுரம்
,, அப்பர் பதிகம் 10 திருத்தாண்டகம்
,, சுந்தரர் பதிகம் 10 பாசுரம்

அருணகிரிநாதரருளிய திருப்புகழ் பதிகம் ஒன்று.

வலிவல மும்மணிக்கோவை.

†

சோழர் கோச்செங்கணுர் இவ்வகையான மாடக் கோயில்களைக் கட்டியதாகக் கூறுவதால் அவர் கட்டு வதற்குரிய காரணத்தையும், அவர் வரலாற்றையும் அறிந்துகொள்ள விரும்புவோரின் பொருட்டு அதைக் கீழே தருகின்ருேம். அவர் புராணமாவது : சோணுட்டில் காவிரியாற்றின் கரையில் சந்திர தீர்த்தத்தின் பக்கத்துள்ள பூஞ்சோலை யொன்றிலுள்ள வெண்ணுவல் மரத்தின் கீழ் தேவ தேவனுகிய சிவபெருமான் சிவ லிங்கமாய்த் திருவருளுருத் தாங்கி யிருந்தார். முற்பிறப்பில் தவஞ்செய்த வெள்ளானை யொன்று அவ்வுருவைக் கண்டு அன்பு மேலிட்டுக் கையால் நீரினை முகந்து வந்து ஆட்டியும் பூக்கள் சாத்தியும் நீலகண்டனை நித்தலும் வழிபட்டது. இதனுல் இவ்விடத்திற்குத் திருவானைக்கா என்ற பெயரும் உண்டாயிற்று. இஃது இவ்வாருக, ஞானமுடைய நற்சிலந்தி யொன்று நம்பர் முடிமேல் சருகு முதலியன வீழ்ந்து தூய்மை கெடாம லிருப்பதற்காக மேல் விதான மென்னுமாறு வாயின் நூலால் வலை யொன்று செய்தது. ஆண்டவரை வழிபடவந்த யானை அதைக் கண்டதும் அவ்வலை அங்கிருப்பது அனுசித மென்று கருதி அழித்து விட்டுச் சென்றது. பின்னர் சிலந்தி வந்து பார்த்துச் சினமுற்று மீண்டும் பந்தரமைத்து யானை வந்த காலை மறுபடியும் அப்பந்தரைக் கண்டு ஆற்ருெணுச் சினங்கொண்டு அழித்தது. சிலந்தி வந்து பார்த்து பந்தரைக் காணுமல் சின மிகக் கொண்டு யானையின் துதிக்கையில் நுழைந்து கடித்தது. கடிக்கவே பொறுக்க லாற்ருது நிலத்திலே கையை மோதிக் கீழே விழுந் திறந்தது. சிலந்தியும் இறந்தது, ஐயன் யானைக்கும் நல்ல வரமளித்து, சிலந்தியானது சோழவரசன் சுபதேவனுக்கும் அவன் மனைவி கமலவதிக்கும்

மகவாகப் பிறக்கச் செய்தார். பிறந்து முடிசூடி அரசாண்ட காலையில் பழம் பிறப்புணர்ச்சியால் இம்மாதிரி மாடக் கோயில்கள் அமைத்துச் சைவத் தொண்டு புரிந்தான். யானையால் ஐயனுக்கு இடர் நேர்ந்தமையால் யானை ஏற முடியாதவாறு மாடக்கோயில் அமைத்ததாகக் கூறுவார். சிலந்தியும், வெள்ளானையும் அடைந்த பேற்றை, திருநாவுக்கரசரும், சுந்தரரும் தமது தேவாரப் பதிகங்களில் குறிப்பிடுகின்றனர். அவற்றுள் இரண்டு ஈண்டுத் தருகின்றோம்.

திருச்சிற்றம்பலம்

புத்தியினாற் சிலந்தியுந்தன் வாயி னூலாற்
பொதுப்பந்த ரதுவிழைத்துச் சருகான் மேய்ந்த
சித்தியினால் அரசாண்டு சிறப்புச் செய்யச்
சிவகணத்துப் புகப்பெய்தார் திறலான் மிக்க
வித்தகத்தால் வெள்ளானை விள்ளா வன்பு
விரவியவா கண்டதற்கு வீடு காட்டிப்
பத்தர்களுக்கு இன்னமுதாம் பாசூர் மேய
பரஞ்சுடரைக் கண்டடியே னுய்ந்த வாறே.

—திருத்தாண்டகம்

தெருண்ட வாயிடை நூல்கொண்டு சிலந்தி
சித்திரப் பந்தர் சிக்கென வியற்றச்
சுருண்ட செஞ்சடை யாயது தன்னைச்
சோழ னாக்கிய தொடர்ச்சிகண் டடியேன்
புரண்டு வீழ்ந்துநின் பொன்மலர்ப் பாதம்
போற்றி போற்றியென் றன்பொடு புலம்பி
யருண்டென் மேல்வினைக் கஞ்சிவந் தடைந்தே
னாவடுதுறை யாதியெம் மானே.

—சுந்தரர் தேவாரம்

திருச்சிற்றம்பலம்

## கல் வேட்டுகள்

திருவலிவலம் மனத்துணை நாதராலயத்தில் 9 கல் வெட்டுகள் கிடைத்திருக்கின்றன. அவைகளெல்லாம் பதின்மூன்ரும் நூற்ருண்டினவை. அவைகளில் ஏழு கல் வெட்டுகள் சோழர்களுடையவை. இரண்டு பாண் டியர்களுடையவை. அவைகளை அரசியலார் 911 - ம் வருஷம் 108 முதல் 116 வரை இப்பக்கங்களில் பதிப்பித் துள்ளார்கள். சோழர்களில் குலோத்துங்கன் காலத்து இரண்டு, இராஜராஜன் III இரண்டு ராஜராஜேந்திரச் சோழன் III மூன்று கல் வெட்டுகள் கிடைத்திருக் கின்றன.

*இவைகளில் கண்ட வரலாறுகளைக் கால வரிசைப் படி யெழுதுவோம். குலோத்துங்கச் சோழன் மூன்ரு வது ஆண்டில் வலிவலத்து மனத்துள் தேவருடைய தேவதான கிராமமாகிய குலோத்துங்கச் சோழ நல்லூ ரில் இராஜாதி ராஜன் பெருங்குளம் என்ற குளத்தை தோண்டுவதற்காக எடுத்துக் கொண்ட நிலத்திற்குப் பதிலாக வேருெரு நிலத்தை ஆலயத்திற்கு மாற்றிக் கொடுக்கப்பட்டது. வலிவலம் அருண்மொழித்தேவ வள நாட்டு வலிவலக் கூற்றத்து வலிவலம் என்ற உபயகுல சுத்த சதிர்வேதி மங்கலம் என்ற பெயரால் குறிக்கப் பெற்றுள்ளது. (110, of 911) மற்ருெரு சிதைந்த கல் வெட்டு (111, of 911) தேவதான கிராமமாகிய குலோத் துங்கச் சோழ நல்லூரில் மனத்துள் நாயனர் கோயி லுக்கு நிலதானம் செய்ததைக் குறிக்கிறது. இதில் அரச ருடைய பெயர் குறித்திரா விட்டாலும், கல் வெட்டில் கண்ட விவரங்களை ஆராய்ந்தால் குலோத்துங்கன் காலத்து என்று அறியலாம். திரிபுவன சக்கரவர்த்தி

இராஜராஜதேவன் III பன்னிரண்டாவது ஆண்டில் கல்வெட்டினுல் (113 of 911) ஆலயத்திற்குத் தந்த ஒரு நிலத்தை தேவதான மென்று குறிப்பிடுவதற்காக திரிசூலத்தை நிலத்தில் நட்ட விவரத்தை அறிகிறோம். அதே மன்னனுடைய பதினுன்காவது ஆண்டு கல்வெட்டொன்று (112 of 911) குலோத்துங்கச் சோழ நல்லூரில் அரசாங்கத்திற்குத் துரோகஞ்செய்த சில குடிகளின் நிலங்களைப் பொது ஏலத்தில் விட்டு அதில் வந்த பணத்தை அரசாங்கக் கருவூலத்திற்குச் சேர்த்துக் கொண்ட விவரம் குறிக்கிறது. நிலங்களுடைய விலையை அரசியலுக்குச் சேர்த்த எட்டு உத்தியோகஸ்தர்கள் மதிப்பிட்டார்க ளென்றும், அந்நிலங்களைச் சில குடிகள் 33000 காசுகளுக்கு வாங்கினுர்க ளென்றும் காண்கிறோம், பகிரங்க ஏலத்தின் பெயர் இராஜ ராஜப் பெருவிலை என்று கண்டிருக்கிறது. தற்காலத்தில் பகைவர்களுடன் சேர்ந்து கொண்ட இராஜத் துரோகிகளின் சொத்துக்களைப் பறிமுதல் செய்யும் வழக்கம் அக்காலத்திலும் இருந்தது எனலாம். இது நடந்தது கி. பி. 1230-ல் என அறிய வேண்டும்.

திரிபுவன சக்ரவர்த்தி இராஜேந்திர சோழன் காலத்தில் திருவலிவலத்தில் இரண்டு மடாலயங்கள் இருந்தன. அவைகளில் ஒன்று தவப்பெருமான் திருமடம், மற்றொன்று திருமூல தேவர் திருமடம். தவப் பெருமான் திருமடத்தைப்பற்றி இரண்டு கல் வெட்டுகளும் திருமூல தேவருடைய மடத்தைப்பற்றி ஒரு கல் வெட்டும்இருக்கின்றன. இராஜேந்திரசோழன் பதினைந்தாவது ஆண்டில் தவப்பெருமான் திருமடத்து ஆதீனகர்த்தர் எதிரொப்பிலாதார். சோமநாததேவ முதலியார் என்பவருக்கு உடையார்மனத்து நாயனுர் ஆலயத்துப் பணியாட்

கள் நிலமாதல் செய்தார்கள். (108 of 911) அதே மன்னன் இருபதாவது ஆண்டில் வலிவலத்து மனத்துண் நாயனுர் ஆலயத்து தென்பக்கத்துள் இருந்த தவப்பெருமான் திருமடத்து ஆதீனரும் திருச்சத்திமுற்றத்துக் கிளையினரும் ஆன எதிரொப்பிலாதார் சோமநாததேவ முதலியார் அவர்களுக்கு அருள்மொழி தேவ வள நாட்டு வலிவலக் கூற்றத்திற்குச் சேர்ந்த தென்விடங்கனுர் குடிகள், நிலதானம் செய்தார்கள். தவப் பெருமான் மடம் மனத்துணை நாயனுர் ஆலயத்து திருமடை விளாகத்தில் தென்பக்கத்தில் இருந்தது. ஆதீனகர்த்தருடைய பெயர் சோமநாததேவ முதலியார். மடத்திற்கு நிலம் தந்த ஒப்பந்தத்தில் குத்தகை தாரர்கள் நிலத்து வரிகளைத் தாங்களே கொடுப்பதாகவும், அவ்வொப்பந்தம் பின்னுல் அந்நிலங்களைக் கிரயம் வாங்குவோர்களையும் சீதனமாய்ப் பெறுகிறவர்களையும் பின் வார்சுகளாய் வருகிறவர்களையும் கட்டுப்படுத்தும் என்ற நிபந்தனை செய்திருக்கிறுர்கள். இனி, தவப்பெருமான் மடத்து அதிபர் திருச்சத்திமுற்றத்தைச் சேர்ந்தவர் என்று சொல்லப் பட்டிருக்கின்றது. சோழர்கள் காலத்தில் திருச்சத்தி முற்றத்தைச் சேர்ந்ததாய் ஒரு மடமும் அதனை ஒட்டி ஒரு சைவ பரம்பரையும் இருந்ததெனப் பல கல்வெட்டுகளால் அறிகின்றேம். அதனை வி!ரமாக கல்வெட்டாராய்ச்சி அறிக்கை 1909 ஆண்டு 103 - 105 வரை பக்கங்களில் காண்கிறேம். இப்பரம்பரையினர் முதலியார்கள் என்று குறிக்கப்பட்டுள்ளது. அவர்களுடைய மடங்கள் திருச்சத்திமுற்றம், இராஜராஜபுரம் என்ற கீழ்பழயாறு, திருப்புத்தூர், திருவாரூர், திருவானைக்கா முதலியவைகளில் இருந்தன. திருச்சத்திமுற்றத்தில் திருஞானசம்பந்தர் மடம் என்ற பெயரால் வழங்கி

வந்தது. இனி வலிவலத்தில் திருமூலதேவர் மடத்திற்கு ஆலய குருக்கள் நிலம் விற்றதாக இவ்வரசனுடைய மூன்ருவது கல்வெட்டு (116 of 911) கூறுகிறது. இதன் பெரியதேவர் இராஜராஜதேவருடைய பதினுன்காவது ஆண்டு குறிக்கப்பட்டுள்ளதால் இம்மடம் இராஜராஜன் I காலத்திலிருந்தே (10 - நூ) இருந்திருக்கலா மென்று யூகிக்கவேண்டும். இனிப் பாண்டியர்களுடைய இரண்டு கல்வெட்டுகளும் ஜடாவர்மன் திரிபுவன சக்கரவர்த்தி சுந்தரபாண்டிய தேவனுடைய ஏழாம் ஆண்டில் பொறிக்கப் பெற்றவை. அதாவது கி. பி. 1258 - பாண்டிமண்டலத்து மனுரோதய வளநாட்டு ஆலத்தூர் நாட்டு பாளைக்குறிச்சியின் குடியான வயிராதராயன், வலிவலத்து மனத்துண் நாயனுர் ஆலயத்துக்குக் குலோத்துங்க சோழ நல்லூர் என்ற ஊரில் ஓர் நிலத்தையும் அவன் மனைவி கூற்றூர் என்ற பொன்மேய்ந்த பெருமாள் நல்லூர் என்ற ஊரின் ஒரு இடத்தையும் விற்பனை செய்தார்கள். மேலேகண்ட கல்வெட்டுகளில் நமக்குக் கிடைக்கும் விவரங்களாவன : வலிவலத்து மனத்துணை நாதர் பெயர் சோழர்கள் காலத்தில் மனத்து நாயனு ரென்றும், மனத்துள் தேவரென்றும், மனத்துள் நாயனு ரென்றும் வழங்கிவந்தது. வலிவலத்திற்கு உபயகுல சுத்த சதுர்வேதி மங்கலமென்ற ஓர் பெயரிருந்தது. அதில் ஒரு பாகத்திற்கு குலோத்துங்கச் சோழ நல்லூர் என்ற பெயரும் இருந்தது. அதில் ராஜாதி ராஜன் பெருங்குளம் என்ற ஒரு குளம் வெட்டப்பட்டது. குலோத்துங்க சோழ நல்லூர் அவ்வாலயத்தின் தேவதான கிராமம், தேவதானமென்று காட்டுவதற்கு நிலத்தில் திரிசூலம் நாட்டப்பட்டது. துரோகிகளுடைய நிலங்களை விற்பனை செய்து

ஆலயத்துக்கு விடப்பட்டது. பல பெரியோர்கள் நிலங்களை இவ்வாலயத்திற்குத் தானஞ் செய்திருக்கிறார்கள். வலிவலத்தில் தவப்பெருமாள் திருமடம், திருமூல தேவர் திருமடம் என்ற இரண்டு மடங்களிருந்தன. தவப்பெருமாள் மடத்தில் திருச்சத்திமுற்றத்து முதலியார்கள் அதிகாரிகளா யிருந்தார்கள். வலிவலம் என்ற ஊரானது அருண்மொழித்தேவ வளநாட்டில் வலிவலக் கூற்றத்தில் ஒரு கிராமமாக இருந்தது. இவை முதலான வரலாறுகள் நமக்குக் கிடைக்கின்றன.



## ஆலய நிர்வாகங்கள்

இக்கோயிலுக்குச் சொந்தமாக சுமார் 45 வேலி நன்செயும் 5 வேலி புன்செயும் ஆக 50 வேலி. 330 ஏக்கர் நிலங்களும் சில வீடுகளும் இருக்கின்றன.

நன்செயிலிருந்து சுமார் 12000 ரூ. வருமானம் சர்க்கார் மோகினி 345 - 13 - 9-ம் ஆக 12345 - 13 - 9-ம் வருமானம் வருகிறது.

ஆண்டின் மொத்தச் செலவு 11700. இதில் சர்க்கார் கிஸ்திமாத்திரம் 2300. சென்னை ஹிந்து மதஸ்தாபன பரிபாலன சபையின் பார்வையில் இரண்டு தர்மகர்த்தர்கள் இருக்கின்றனர்.

## கோயில் பூஜை விழாக்கள்

இக்கோயிலில் தினந்தோறும் 6 காலபூஜைகள் நடந்து வருகின்றன. அர்ச்சனை அபிஷேக முதலியன விமரிசையாக காலந்தவறாது நடைபெற்று வருகின்றன. நவராத்திரி, கந்தர் சஷ்டி உற்சவம் ஆண்டுதோறும் பண்டுதொட்டுச் சிறப்பாக உயர்பெருஞ் சைவத் திருவாளர் வலிவலம் K. மனத்துணைநாத தேசிகரவர்

களால் நடைபெற்று வருகின்றது. இவ்வூர் சிற்பச்சிலைகள் உயிர் ஓவியம்போன்று கண்ணைக் கவருந்தன்மை வாய்ந்தவை. பக்தியில் ஈடுபடுத்துங் காட்சியையுடையன. மின்சார விளக்குகளும் அமைக்கப்பட்டுள்ளன.

## இலக்கியம்

வலிவலம் மும்மணிக்கோவை என்ற அரிய நூலொன்று டாக்டர். உ. வே. சாமிநாதையர் அவர்கள் வெளியிட்டிருக்கின்றனர். அதன் ஆசிரியர் இன்னாரெனத் தெரியவில்லை. அது இவ்வூர் இறைவனைப்பற்றியும், இறைவியைப்பற்றியும் சிறப்பித்துக் கூறுகின்றது. சொற்சுவை, பொருட்சுவை மிக்கது. உலகியல்பை நன்கு எடுத்துக் காட்டுவது. யாவரும் படித்து இன்புறத்தக்கது; "கவிக்குத்தகுவன கண்ணுக்கினிய கேட்கில் இன்பஞ் செவிக்குத்தகுவன சிந்தைக்குரியன" என நம்பியாண்டார் நம்பி பதினொராந் திருமுறையில் அருளிய திருவாக்கிற் கிலக்கியம் திருவலிவல மும்மணிக் கோவையே எனக்கூறல் உயர்வு நவிற்சியாகாது. எடுத்துக்காட்டாகச் சிலவற்றைக் கூறுதும்.

"வேயெனப் பணைத்த தோளு மாய்மயிற்
பெடையெனச் சிறந்த சாயலு மடமருள்
மானெனக் கிடந்த நோக்கமுந் தேனென
அமிழ்தூற் றிருக்கு மழலையங் குழலிசை
வண்டுபாட் டயருங் கொண்டையுந் தொண்டையஞ்
செவ்வாய் வனப்பு மூரல்வெண் முத்தும்
உற்பல மலர்ந்த வற்புதப் பதுமமும்
இடுகிடை யொல்க வடிபரந் தெழுந்து
கச்சு வீசிய முற்று முலையும்

இலவல ரெள்ளிய நலனுடை யடியும்
ஓவியம் பெற்று மேவிய தன்ன
மாழையுண் கண்ணி மாதுமை பாக''

"மற்று ருதவிசெய் வார்நெஞ்ச மேநம் வலிவலத்தை
உற்றூர் மனத்துணை நாதரல் லாலுகந் துள்ளுகண்டாய்
சுற்றூர் யமபடர் சூலமும் பாசமுஞ் சுற்றிச்சுற்றி
இற்று ரெனக்கழுத் திற்சுருக் கிட்டுநின் றீர்க்குமன்றே.

வாழ்வாய் மனத்துணை நாதனை வாழ்த்தி வலிவலமே [ள்ளத்
சூழ்வாய் அவர்க்குத் தொழும்பு செய்வாய்மும்மைத் துன்பவெ
தாழ்வாய் வெங்காமச் சுறவேற்றி னேறுண் டலைந்தலைந்து
வீழ்வாய் மடநெஞ்ச மேஇனி யாயினும் வீடெய்தவே.

தேருத யாவுந் தெளிவிக்குந் தேறெனத் தேறிநின்று
கூருத நூலிங்குக் கூறவுண் டோவெண்ணில் கோடிவிண்ணோர்
மாருத வண்ணநஞ் சுண்டே வலிவலம் வாழ்வுகொண்டார்
ஆருத செம்மை யரக்கூட்டி யன்ன வடித்தலமே.

மேலைத் தவமினியென் வெண்ணீறிட் டஞ்செழுத்தாற்
காலைக் கடனகழித்துக் கண்ணுதலான் - நூலையே
வாசிப்பா மெந்தை வலிவலத்தை யேவாழ்த்தி
நேசிப்பாம் வந்திப்பா நின்று.

நிற்பன செல்வன யாவையு மாயிந் நிலவுலகிற்
கற்பன கேட்பன வெல்லாங் கழித்துக் கடைமுறைக்கே
சொற்பன மாயின கண்டேன் வலிவலத் தொன்னகர்வாழ்
விற்பன னேயினி நின்னரு ளேதுணை வேறிலையே.

அருளு மடக்கமும் வாய்மையு நல்ல வறிவுமுண்மைப்
பொருளு மொழுக்கமும் யாதென்று கேட்பிற் புலம்புகொண்டு
மருளு மடநெஞ்ச மேயஞ்ச லீசன் வலிவலமே
தெருளு மியல்பி னிறைஞ்சியு மேத்தியுஞ் சிந்திப்பதே''

என்று மாழையொண் கண்ணியாரையும், மனத்துணை நாதரையும் கனிந்து பாடியருளியது ஈண்டுச் சிந்திக்கற் பாலது.

---

உ

# திருவலிவலத் தேவாரப் பதிகங்கள்

## சம்பந்தர்

### பண் - பழந்தக்கராகம்

திருச்சிற்றம்பலம்

ஒல்லையாறி உள்ளம்ஒன்றிக் கள்ளம்ஒழிந் துவெய்ய
சொல்லையாறித் தூய்மைசெய்து காமவினை யகற்றி
நல்லவாறே யுன்றன்நாமம் நாவில்நவின் றேத்த
வல்லவாறே வந்துநல்காய் வலிவலம்மே யவனே. க

இயங்குகின்ற இரவிதிங்கள் மற்றுநல்தே வரெல்லாம்
பயங்களாலே பற்றிநின்பால் சித்தந்தெளி கின்றிலர்
தயங்குசோதி சாமவேதா காமனைக்காய்ந் தவனே
மயங்குகின்றேன் வந்துநல்காய் வலிவலம்மே யவனே. உ

பெண்டிர்மக்கள் சுற்றமென்னும் பேதைப்பெருங் கடலை
விண்டுபண்டே வாழமாட்டேன் வேதனைநோய் நலியக்
கண்டுகண்டே யுன்றன்நாமங் காதலிக்கின்ற துள்ளம்
வண்டுகிண்டிப் பாடுஞ்சோலை வலிவலம்மே யவனே. ௩

மெய்யராகிப் பொய்யைநீக்கி வேதனையைத் துறந்து
செய்யரானார் சிந்தையானே தேவர்குலக் கொழுந்தே
நைவன்நாயேன் உன்றன்நாமம் நாளும்நவிற் றுகின்றேன்
வையம்முன்னே வந்துநல்காய் வலிவலம்மே யவனே. ச

துஞ்சும்போதுந் துற்றும்போதுஞ் சொல்லுவனுன் திறமே
தஞ்சமில்லாத் தேவர்வந்துன் தாளிணைக்கீழ்ப் பணிய
நஞ்சையுண்டாய்க் கென்செய்கேனோ நாளும்நினைந் தடியேன்
வஞ்சமுண்டென் றஞ்சுகின்றேன் வலிவலம்மே யவனே. ரு

புரிசடையாய் புண்ணியனே நண்ணலார்மூ வெயிலும்
எரியஎய்தாய் எம்பெருமான் என்றிமையோர் பரவும்
கரியுரியாய் காலகாலா நீலமணி மிடற்று
வரியரவா வந்துநல்காய் வலிவலம்மே யவனே. சு

தாயும்நீயே தந்தைநீயே சங்கரனே யடியேன்
ஆயுநின்பால் அன்புசெய்வான் ஆதரிக்கின் றதுள்ளம்
மாயமாய காயந்தன்னுள் ஐவர்நின்றொன் றலொட்டார்
மாயமேயென் றஞ்சுகின்றேன் வலிவலம்மே யவனே. எ

நீரொடுங்குஞ் செஞ்சடையாய் நின்னுடையபொன் மலையை
வேரொடும்பீழ்ந் தேந்தலுற்ற வேந்தன்இரா வணனைத்
தேரொடும்போய் வீழ்ந்தலறத் திருவிரலால் அடர்த்த
வாரொடுங்குங் கொங்கைபங்கா வலிவலம்மே யவனே. அ

ஆதியாய நான்முகனும் மாலும்அறி வரிய
சோதியானே நீதியில்லேன் சொல்லுவன்நின் திறமே
ஓதிநாளும் உன்னையேத்தும் என்னைவினை அவலம்
வாதியாமே வந்துநல்காய் வலிவலம்மே யவனே. கூ

பொதியிலானே பூவணத்தாய் பொன்திகழுங் கயிலைப்
பதியிலானே பத்தர்சித்தம் பற்றுவிடா தவனே
விதியிலாதார் வெஞ்சமணர் சாக்கியரென் றிவர்கள்
மதியிலாதா ரென்செய்வாரோ வலிவலம்மே யவனே. க0

வன்னிகொன்றை மத்தஞ்சூடும் வலிவலம்மே யவனைப்
பொன்னிநாடன் புகலிவேந்தன் ஞானசம்பந்தன் சொன்ன
பன்னுபாடல் பத்தும்வல்லார் மெய்த்தவத்தோர் விரும்பும்
மன்னுசோதி யீசனோடே மன்னியிருப் பாரே. கக

திருச்சிற்றம்பலம்

---

## திருவிராகம் - பண் - வியாழக்குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

பூவியல் புரிகுழல் வரிசிலை நிகர்நுதல்
ஏவியல் கணைபிணை யெதிர்விழி யுமையவள்
மேவிய திருவுரு வுடையவன் விரைமலர்
மாவியல் பொழில்வலி வலம்உறை யிறையே. ௧

இட்டம தமர்பொடி யிசைதலின் நசைபெறு
பட்டவிர் பவளநன் மணியென அணிபெறு
விட்டொளிர் திருவுரு வுடையவன் விரைமலர்
மட்டமர் பொழில்வலி வலம்உறை யிறையே. ௨

உருமலி கடல்கடை வுழிவுல கமருயிர்
வெருவுறு வகையெழு விடம்வெளி மலையணி
கருமணி நிகர்களம் உடையவன் மிடைதரும்
மருமலி பொழில்வலி வலம்உறை யிறையே. ௩

அனல்நிகர் சடையழல் அவியுற வெனவரு
புனல்நிகழ் வதுமதி நனைபொறி அரவமும்
எனநினை வொடுவரு மிதுமெல முடிமிசை
மனமுடை யவர்வலி வலம்உறை யிறையே. ௪

பிடியதன் உருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடும் அவரிடர்
கடிகண பதிவர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலம்உறை யிறையே. ௫

தரைமுதல் உலகினில் உயிர்புணர் தகைமிக
விரைமலி குழலுமை யொடுவிர வதுசெய்து
நரைதிரை கெடுதக வதுஅரு ளினன்எழில்
வரைதிகழ் மதில்வலி வலம்உறை யிறையே. ௬

நலிதரு தரைவர நடைவரும் இடையவர்
பொலிதரு மடவர லியர்மனை யதுபுகு
பலிகொள வருபவன் எழில்மிகு தொழில்வளர்
வலிவரு மதில்வலி வலம்உறை யிறையே. எ

இரவணன் இருபது கரமெழில் மலைதனில்
இரவண நினைதர அவன்முடி பொடிசெய்து
இரவணம் அமர்பெயர் அருளின னகநெதி
இரவண நிகர்வலி வலம்உறை யிறையே. அ

தேன்அமர் தருமலர் அணைபவன் வலிமிகும்
ஏனம தாய்நிலம் அகழ்அரி யடிமுடி
தானணை யாவுரு வுடையவன் மிடைகொடி
வான்அணை மதில்வலி வலம்உறை யிறையே. கூ

இலைமலி தரமிகு துவருடை யவர்களும்
நிலைமையில் உணல்உடை யவர்களும் நினைவது
தொலைவலி நெடுமறை தொடர்வகை யுருவினன்
மலைமலி மதில்வலி வலம்உறை யிறையே. க0

மன்னிய வலிவல நகருறை யிறைவனை
இன்னியல் கழுமல நகரிறை யெழில்மறை
தன்னியல் கலைவல தமிழ்விர கனதுரை
உன்னிய வொருபதும் உயர்பொருள் தருமே. கக

திருச்சிற்றம்பலம்

---

# திருநாவுக்கரசர்

## திருத்தாண்டகம்

### திருச்சிற்றம்பலம்

நல்லான்காண் நான்மறைக ளாயி னான்காண் நம்பன்காண் நணுகாதார் புரமூன் றெய்த, வில்லான்காண் விண்ணவர்க்கும் மேலா னான்காண் மெல்லியலாள் பாகன்காண் வேத வேள்விச், சொல்லான்காண் சுடர்மூன்று மாயி னான்காண் தொண்டாகிப் பணிவார்க்குத் தொல்வான் ஈய,வல்லான்காண் வானவர்கள் வணங்கி யேத்தும் வலிவலத் தான் காணவனென் மனத்து ளானே. க

ஊனவன்காண் உடல்தனக்கோ ருயிரா னான்காண் உள்ளவன் காண் இல்லவன்காண் உமையாட் கென்றுந், தேனவன்காண் திரு வவன்காண் திசையா னான்காண் தீர்த்தன்காண் பார்த்தன்றன் பணி யைக்கண்ட, கானவன்காண் கடலவன்காண் மலையானான்காண் களி யானை யீருரிவை கதறப் போர்த்த, வானவன்காண் வானவர்கள் வணங்கி யேத்தும் வலிவலத்தான் காணவனென் மனத்து ளானே.உ

ஏயவன்காண் எல்லார்க்கு மியல்பா னான்காண் இன்பன்காண் துன்பங்க ளில்லா தான்காண், தாயவன்காண் உலகுக்கோர் தன் னொப் பில்லாத் தத்துவன்காண் உத்தமன்காண் தானே யெங்கும், ஆயவன்காண் அண்டத்துக் கப்பா லான்காண் அகங்குழைந்து மெய் வருந்தி அழுவார் தங்கள், வாயவன்காண் வானர்கள் வணங்கி யேத் தும் வலிவலத்தான் காணவனென் மனத்து ளானே. ௩

உய்த்தவன்காண் உடல்தனக்கோ ருயிரா னான்காண் ஓங்காரத் தொருவன்காண் உலகுக்கெல்லாம், வித்தவன்காண் விண்பொழியும் மழையா னான்காண் விளைவவன்காண் விரும்பாதார் நெஞ்சத் தென் றும், பொய்த்தவன்காண் பொழிலேழுந்தாங்கி னான்காண் புனலோடு வளர்மதியும் பாம்புஞ் சென்னி, வைத்தவன்காண் வானவர்கள் வணங்கி யேத்தும் வலிவலத்தான் காணவனென் மனத்து ளானே.

கூற்றவன்காண் குணமவன்காண் குறியா னுன்காண் குன்றங்க ளனைத்துங்காண் கோல மாய, நீற்றவன்காண் நிழலவன்காண் நெருப்பானுன்காண் நிமிர்புன் சடைமுடிமேல் நீரார் கங்கை, ஏற்ற வன்காண் ஏழுலகு மாயி னுன்காண் இமைப்பளவிற் காமனைமுன் பொடியாய்வீழ, மாற்றவன்காண் வானவர்கள் வணங்கி யேத்தும் வலிவலத்தான் காணவனென் மனத்து ளானே.

நிலையவன்காண் தோற்றவன்காண் நிறையா னுன்காண் நீர வன்காண் பாரவன்காண் ஊர்மூன் றெய்த, சிலையவன்காண் செய்ய வாய்க்கரிய கூந்தல் தேன்மொழியை ஒருபாகஞ் சேர்த்தி னுன்காண், கலையவன்காண் காற்றவன்காண் காலன்வீழக் கறுத்தவன்காண் கயி லாயமென்னுந்தெய்வ, மலையவன்காண் வானவர்கள் வணங்கி யேத் தும் வலிவலத்தான் காணவனென் மனத்து ளானே. கூ

பெண்ணவன்காண் ஆணவன்காண் பெரியோர்க் கென்றும் பெரியவன்காண் அரியவன்காண் அயனு னுன்காண், எண்ணவன் காண் எழுத்தவன்காண் இன்பக் கேள்வி இசையவன்காண் இய லவன்காண் எல்லாங் காணும், கண்ணவன்காண் கருத்தவன்காண் கழிந்தோர் செல்லுங் கதியவன்காண் மதியவன்காண் கடலேழ் சூழ்ந்த, மண்ணவன்காண் வானவர்கள் வணங்கி யேத்தும் வலி வலத்தான் காணவனென் மனத்து ளானே. எ

முன்னவன்காண் பின்னவன்காண் மூவாமேனி முதலவன்காண் முடிவவன்காண் மூன்று சோதி, அன்னவன்காண் அடியார்க்கும் அண்டத் தார்க்கும் அணியவன்காண் சேயவன்காண் அளவில் சோதி, மின்னவன்காண் உருமவன்காண் திருமால் பாகம் வேண்டி னன்காண் ஈண்டுபுனற் கங்கைக் கென்றும், மன்னவன்காண் வான வர்கள் வணங்கியேத்தும் வலிவலத்தான் காணவனென் மனத்து ளானே. அ

நெதியவன்காண் யாவர்க்கும் நினைய வொண்ணு நீதியன்காண் வேதியன்காண் நினைவார்க் கென்றுங், கதியவன்காண் காரவன்காண்

கனலா ஞன்காண் காலங்க ளூழியாய்க் கலந்து நின்ற, பதியவன் காண் பழமவன்காண் இரதந் தான்காண் பாம்போடு திங்கள் பயில வைத்த, பதியவன்காண் வானவர்கள் வணங்கி யேத்தும் வலிவலத் தான் காணவனென் மனத்து ளானே. ௯

பங்கயத்தின் மேலானும் பாலனு யுலகளந்த படியானும் பரவிக் காணு, தங்கைவைத்த சென்னியரா யளக்க மாட்டா அனலவன் காண் அலைகடல்சூ ழிலங்கை வேந்தன், கொங்கலர்த்த முடிநெரிய விரலா லூன்றுங் குழகன்காண் அழகன்காண் கோல மாய, மங்கை யர்க்கோர் கூறன்காண் வானோ ரேத்தும் வலிவலத்தான் காணவ னென் மனத்து ளானே. ௧௦

திருச்சிற்றம்பலம்

---

## சுந்தரர்

### பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்

ஊனங் கத்துயிர்ப் பாயுல கெல்லாம் ஓங்கா ரத்துரு வாகி நின் றானை, வானங் கத்தவர்க் கும்அளப் பரிய வள்ள லையடி யார்கள் தம் முள்ளத், தேனங் கத்தமு தாகியுள் ளூறுந் தேச னைத்திளைத் தற்கினி யானை, மானங் கைத்தலத் தேந்தவல் லானை வலிவ லந்தனில் வந்துகண் டேனே. ௧

பல்லடி யார்பணிக் குப்பரி வானைப் பாடியா டும்பத்தர்க் கன் புடை யானைச், செல்லடி யேநெருக் கித்திறம் பாது சேர்ந்தவர்க் கேசித்தி முத்திசெய் வானை, நல்லடி யார்மனத் தெய்ப்பினில் வைப்பை நானுறு குறையறிந் தருள்புரி வானை, வல்லடி யார்மனத் திச்சையு ளானை வலிவ லந்தனில் வந்துகண் டேனே. ௨

ஆழிய னயகன் றேயுயர்ந் தானை யாதியந் தம்பணி வார்க்கணி யானைக், கூழைய ராகிப்பொய் யேகுடி யோம்பிக் குழைந்து மெய்

யடி யார்குழுப் பெய்யும், வாழியர்க் கேவமு வாநெறி காட்டி மறு பிறப் பென்னை மாசறுத் தானே, மாழையொண் கண்ணுமை யைமகிழ்ந் தானே வலிவ லந்தனில் வந்துகண் டேனே. ௩

நாத்தா னுன்றிற மேதிறம் பாது நண்ணியண் ணித்தமு தம் பொதிந் தூறும், ஆத்தா னையடி யேன்றனக் கென்றும் அளவிறந்த பல தேவர்கள் போற்றும், சோத்தா னைச்சுடர் மூன்றிலு மொன்றித் துருவி மால்பிர மன்னறி யாத, மாத்தா னைமாத் தெனக்குவைத் தானை வலிவ லந்தனில் வந்துகண் டேனே. ௪

நல்லிசை ஞானசம் பந்தனும் நாவினுக் கரசரும் பாடிய நற்ற மிழ்மாலை, சொல்லிய வேசொல்லி யேத்துகப் பானைத் தொண்ட னேனறி யாமை யறிந்து, கல்லியன் மனத்தைக் கசிவித்துக் கழலடி காட்டியென் களைகளை யறுக்கும், வல்லியல் வானவர் வணங்கநின் றானை வலிவ லந்தனில் வந்துகண் டேனே. ௫

பாடு மாபாடிப் பணியுமா றறியேன் பனுவுமா பனுவிப் பரவுமா றறியேன், தேடுமா தேடித் திருத்துமா றறியேன் செல்லுமா செல் லச் செலுத்துமா றறியேன், கூடுமா றெங்ஙன மோவென்று கூறக் குறித்துக் காட்டிக் கொணர்ந்தெனை யாண்டு, வாடிநீ வாளா வருந்த லென் பானை வலிவ லந்தனில் கண்டுகொண் டேனே. ௬

பந்தித்த வல்வினைப் பற்றறப் பிறவிப் படுக டற்பரப் புத்தவிர்ப் பானைச், சந்தித் ததிற லார்பணி பூட்டித் தவத்தை யீட்டிய தம்மடி யார்க்குச், சிந்தித் தற்கெளி தாய்த்திருப் பாதஞ் சிவலோ கந்திறந் தேற்றவல் லானை, வந்திப் பார்தம் மனத்தினுள் ளானை வலிவ லந் தனில் வந்துகண் டேனே. ௭

எவ்வவர் தேவ ரிருடிகண் மன்ன ரெண்ணிறந் தார்கண்மற் றெங்குநின் றேத்த, அவ்வவர் வேண்டிய தேயருள் செய்து அடைந் தவர்க் கேயிட மாகிநின் றானை, இவ்வவர் கருணையெங் கற்பகக் கடலை யெம்பெரு மானரு ளாயென்ற பின்னை, வவ்வியென் னாவி மனங்கலந் தானை வலிவ லந்தனில் வந்துகண் டேனே. ௮

திரியு முப்புரஞ் செற்றதுங் குற்றத் திறல ரக்கனைச் செறுத் தது மற்றைப், பெரிய நஞ்சமு துண்டது முற்றும் பின்னை யாய் முன்ன மேமுளைத் தானை, அரிய நான்மறை யந்தண ரோவா தடிப ணிந்தறி தற்கரி யானை, வரையின் பாவை மணாளனெம் மானை வலிவ லந்தனில் வந்துகண் டேனே. ௯

என்ற அந்தணன் தலையினை யறுத்துநிறைக்க மாலுதி ரத்தினை யேற்றுத், தோன்று தோண்மிசைக் களேபரந் தன்னைச் சுமந்த மாவிர தத்தகங் காளன், சான்று காட்டுதற் கரியவ னெளியவன் றன்னைத் தன்னி லாமனத் தார்க்கு, மான்று சென்றணை யாதவன் றன்னை வலிவ லந்தனில் வந்துகண் டேனே. ௧௦

கலிவ லங்கெட வாரழ லோம்புங் கற்ற நான்மறை முற்றன லோம்பும், வலிவலந்தனில் வந்துகண் டடியேன் மன்னு நாவலா ரூரன்வன் றொண்டன், ஒலிகொ ளின்னிசைச் செந்தமிழ் பத்தும் உள்ளத் தாலுகந் தேத்தவல் லார்போய், மெலிவில் வானுல க்த்தவ ரேத்த விரும்பி விண்ணுல கெய்துவர் தாமே. ௧௧

திருச்சிற்றம்பலம்

---

## திருக்ஷேத்திரக் கோவை

### திருத்தாண்டகம்

புலிவலம் புத்தூர் புகலூர் புன்கூர்
புறம்பயம் பூவணம் பொய்கை நல்லூர்
வலிவல மாற்பேறு வாய்மூர் வைகல்
வலஞ்சுழி வாஞ்சிய மருகல் வன்னி
நிலமலி நெய்த்தானத் தோடொத் தானத்து
நிலவுபெருங் கோயில்பல கண்டாற் றொண்டீர்
கலிவலிமிக் கோனைக்கால் விரலாற் செற்ற
கயிலாய நாதனையே காண லாமே.

## திருப்பதிகக் கோவை

### திருத்தாண்டகம்

வலம்புரமா லங்காடு சிவபுரங்கா ளத்திவலி
வலஞ்சாய்க்காடு திருக்கோடி காநகரம்
நலந்திகழும் பூவணம்கோ ளிலிமின்றி யூருநறை
யூர்ச்சித்தீச் சரமுநான்கா கும்பதிகம்
மலஞ்சுழிநல் லூர்பழன மாமாத்தூ ரண்ணுமலை
கடம்பூரின் னம்பர்நா ரையூரைந்தா
நிலந்திகழ்நா கேச்சரமாற் பேருமழ பாடிநெய்த்
தானம்வெண் காடுநீள் பதிகமாறே.

தண்டலை நீணெறிகோட் டேர்வெண் டுறையோடமழ
கேதருகொள் ளம்பூதூர் பேரெயில்கொள் ளிக்காடு
கண்டரு தெங்கூர்நெல் லிக்காநாட்டியத் தான்குடியே
காறுயில் கன்றாப்பூர் வலிவலங் கச்சினத்தோ
டண்டர் பிரான்கோ ளிலிதென்திரு வாய்மூர்மறைக்
காடகத்தி யான்பள்ளி கோடிக்குழகருந் தென்கரையி
லெண்டரு நூற்றிருபத் தேழிப்பால் ஈழத்தி
லிசைகோண மாமலை கேதீச்சர மென்றிரண்டே.

வானவனை வலிவலமும் மறைக்காட் டானை
மதிசூடும் பெருமானை மறையோன் றன்னை
யேனவனை யிமவான்றன் பேதை யோடும்
இனிதிருந்த பெருமானை யேத்து வார்க்குத்
தேனவனைத் தித்திக்கும் பெருமான் றன்னைத்
தீதிலா மறையவனைத் தேவர் போற்றுங்
கானவனைக் கஞ்சனூர் ஆண்ட கோவைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந் தேனே.

சிறையார் வரிவண்டு தேனேபாடுந்
திருமறைக் காட்டெந்தை சிவலோகனே
மறையான்றன் வாய்மூருங் கீழ்வே ளூரும்
வலிவலமுந் தேவூரு மன்னி யங்கே
யுறைவானை யுத்தமனை யொற்றி யூரிற்
பற்றி யாள்கின்ற பரமன் தன்னைக்
கறையார் கடல்புடைசூழ் அந்தண் நாகைக்
காரோணத்து என்றென்றுங் காண லாமே.



## திருப்புகழ்

தொடுத்த நாள்முதல் மருவிய இளைஞனும்
இருக்க வேறொரு பெயர்தம திடமது
துவட்சி யேபெறி லவருடன் மருவிடு பொதுமாதர்

துவக்கி லேயடி படாநறு மலரயன்
விதித்த தோதக வினையுறு தகவது
துறக்க நீறிட அரகர வெனவுளம் அமையாதே

அடுத்த பேர்மனை துணைவியர் தமர்பொருள்
பெருத்த வாழ்விது சதமென மகிழ்வுறு
மசட்ட னுதுலன் அவமது தவிரநின் அடியாரோடு

அமர்த்தி மாமலர் கொடுவழி படவெனை
இருத்தி யேபர கதிபெற மயில்மிசை
அரத்த மாமணி அணிகழ லிணைதொழ அருள்தாராய்

எடுத்த வேல்பிழை புகலரி தெனவெதிர்
விடுத்த ராவணன் மணிமுடி துணிபட
எதிர்த்து மோர்கணை விடுமொரு காதலன் மருகோனே

எருக்கு மாலிகை குவளையி னறுமலர்
கடுக்கை மாலிகை பகிரதி சிறுபிறை
யெலுப்பு மாலிகை புனைசடி லவனருள் புதல்வோனே

வடுத்த மாவென நிலைபெறு நிருதனை
அடக்க ஏழ்கடல் எழுவரை துகளெழ
வடித்த வேல்விடு கரதல ஜெயஜெய புயவேளே

வனத்தில் வாழ்குற மகள்முலை முழுகிய
கடப்ப மாலிகை யணிபுய அமரர்கள்
மதித்த சேவக வலிவல நகருறை பெருமாளே.

